*Nam nāṭu*

*Malar 2, itaḻ 219*

*February 26, 1955*

Record no. 1131

REGD. No. M. 6311 ★ தனி இதழ் 1 அணு ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 55630

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் ஆசிரியர்: அண்ணாதுரை

The "Nam Nadu" A Tamil Daily. ✶ The Official Organ Of The D.P.F.

**மக்களுக்காக, மக்களால் நடைபெறும் மக்களாட்சி?**

பம்பாய் சட்ட (மேல்) சபையில், இடை வேளைக்குப் பிறகு எந்த மந்திரியுமே சபைக்கு வராததைக் குறித்து இரண்டு அங்கத்தினர்கள் சபையை விட்டு வெளியேறினர் என்று தெரிகிறது.

எம். சி. தாண்டே என்ற உறுப்பினர் வெளியேறு முன், "சபையை சர்க்கார் இவ்வளவு அலட்சியப் படுத்தக்கூடாது," என்று குறிப்பிட்டிருக்கிறார்.

இரண்டு அங்கத்தினர்களும் வெளியேறியபொழுது, கல்வி இலாகா உதவி மந்திரி இந்துமதி சிமன்லால் என்பவர் சபைக்கு வந்து அமர்ந்தாராம்.

மலர் 2] சென்னை: மாசி 14உ சனி (26—2—55) ★ ★ வெளியீடு: மாசி 15உ ஞாயிறு (27—2—55) [இதழ் 21

# அரிசன மண விருந்துக்கு பார்ப்பன பரிசாரகன்

## பரிசாரகன் போக்கிற்கு பார்ப்பனக் கிழடுகள் எதிர்ப்பு!

### கிழங்களின் விருந்துக்கு எதிராக பார்ப்பன இளைஞர்கள் மறியல்!

*பார்ப்பனர்களை அரிசனங்களும் ஒதுக்கிவிட்டனர்!*

ஆமதாபாத், பிப். 24—

விராமகம் மாவட்டத்தைச் சேர்ந்த அரிசனங்கள், குறிப்பிட்ட ஒரு பார்ப்பனப் பிரிவினருக்கு உதவியாக எத்தொழிலையும் செய்வதில்லை என்ற முடிவுக்கு வந்துவிட்டனர். அரிசனங்களிடம் தாராளமாகக் கலந்துகொண்ட ஒரு பார்ப்பனப் பரிசாரகனை, அப்பிரிவைச் சேர்ந்த பார்ப்பன முதியவர்கள் ஒதுக்கியதின் எதிரொலியே, மேற்படி அரிசனங்களின் முடிவு.

அரிசன குடும்பங்களில் நடைபெறும் திருமணங்களில் உணவு சமைக்கும் வழக்கத்தை மேற்குறித்த பார்ப்பன பரிசாரகன் வழக்கமாகக் கொண்டிருந்தான். அவ்வாறு தொழில் செய்யக்கூடாது என அவனை, அவன் ஜாதியைச் சேர்ந்த வயோதிகப் பார்ப்பனர்கள் பலமுறை எச்சரித்துள்ளனர்.

முடிவாக அப்பரிசாரகனை வைதீகப் பார்ப்பனர்கள் ஜாதிப் பிரஷ்டம் செய்ததுடன் நில்லாமல், பலாத்காரமாக அவனுக்குப் பிராயச்சித்தமும் செய்தனர். அதன் அறிகுறியாக ஒரு சமூக விருந்தும் நடத்தினர்.

பார்ப்பனக் கிழடுகளின் மேற்படி போக்கை 'கடைந்தெடுத்த முட்டாள்தனம்' எனக் கூறினதுடன், அப்பிரிவைச் சேர்ந்த பார்ப்பன இளைஞர்கள், அச்சமூகப் பொது விருந்துக்குச் சென்றவர்களை விருந்தில் கலந்துகொள்ளவிடாது மறியலும் செய்தனர்.

அப்பார்ப்பன இளைஞர்களைப் போலவே, அரிசனங்களும் அப்பார்ப்பனப் பிரிவினருக்கு உதவியாக ஒரு தொழிலையும் மேற்கொள்ளுவதில்லை என முடிவுகட்டிவிட்டனர்.

## வடநாட்டவர் வெள்ளையரின் 'வாரிசு!

### சாதி பேதங்களை ஒழித்து ஒன்றுபட்டாலே வாழ்வு!

### சாதிகள் ஒழிய புராணப் புளுகுகள் ஒழிய வேண்டும்

## புஞ்சை புளியம்பட்டியில் பொதுச்செயலாளர்

"பல்லாயிரக்கணக்கான மக்கள் இங்கு கூடி, எங்கள் கருத்துக்களை ஆவலோடு கேட்கிறீர்கள்; இதைப் போலவே இன்று இந்த நாட்டின் எந்த மூலைக்குச் சென்றாலும் மக்கள் ஆவல்மிக நமது கருத்துக்களைக் கேட்கிறார்கள்.

"தி. மு. கழகத்தின் வரலாறே போராட்டங்கள் மிகுந்தது; விடுதலைக்காக இடைவிடாது போராடிக்கொண்டிருக்கும் தி. மு. கழகம் பொதுமக்கள் பெருவாரியாக ஏற்றுக்கொள்வார்களானால், விடுதலைப் போரின் இறுதிக் கட்டத்தை நிறைவேற்ற தயாராகவே இருக்கிறது,"

என்று, 21—2—55 அன்று புஞ்சை புளியம்பட்டி தி. மு கழகச் சார்பில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் பேசிய பொதுச் செயலாளர் அண்ணாதுரை அவர்கள் குறிப்பிட்டார்கள்.

தொடர்ந்து பேசிய அவர் குறிப்பிட்டதாவது:—

"இந்தக் கூட்டத்திற்கு, சன்மார்க்க சங்கத் தலைவரான டாக்டர் அருணாசலம் தலைமை தாங்குகிறார்.

"இது எதை எடுத்துக் காட்டுகிறது? தி. மு. கழகம் ஒரு நாஸ்திக இயக்கமல்ல என்பதைத் தானே? தி. மு. கழகம் ஒரே கடவுள்தான் உண்டு எனக் கருதுகிறது.

"ஆனால் நாட்டிலேஎத்தனையோ எண்ணற்ற கடவுள்களும், மதங்களும் இருப்பதை நாம் காண்கிறோம்.

"அந்த மதங்களும் ஆண்டவர்களும், மக்கள் இந்த உலகைவிட்டு 'மேலே' போவதற்கு மார்க்கங்களைக் கூறுவன என்று சொல்கிறார்கள்.

"நாங்கள் எதாவது புதியதொரு மதத்தைக் கொண்டவர்களல்லர். எங்கள் நோக்கமெல்லாம், மக்கள் மடிந்த பிறகு மேலுலகம் செல்கிறார்களா, கீழுலகம் செல்கிறார்களா என்பதைப் பற்றியதல்ல. மக்கள் இந்த உலகத்தில் வாழும் போது, அவர்கள் வாழ்வு வளமானதாயிருக்கச் செய்ய, அவர்கள் வாழ்வில் நிலவும் துன்பங்களைக் குறைத்து இன்பங்களைப் பெருக்க வழியும் வகையும் உண்டா என்று எண்ணிப்பார்க்க வேண்டும் என்பதுதான். அப்படி மக்கள் இந்த உலக வாழ்க்கையில், வேறு எல்லா நாட்டு மக்களும் பெற்று வாழும் பேரின்பமும், வளமும், வசதியும், பெற வேண்டும் என்பதற்காகப் பாடுபடுவதுதான், வேலை செய்வதுதான் எங்கள் பணி.

"மக்கள் ஒன்றுபட்டு உழைத்து உரிமை பெற்று, வாழ்வில் முன்னேறவேண்டும். ஆனால் இங்கு மக்கள் ஒன்றுபட முடியாதவாறு சாதிகள், பேதங்கள் இருக்கின்றன.

'சாதிப் பூசல்களை வளர்ப்பதல்ல நமது நோக்கம்; இங்கு வாழும் மக்கள் எல்லாம் 'நாம் ஒரே இனமக்கள், திராவிடர்கள்' என்ற உணர்வு பெற வேண்டும் என்பது தான். இந்த நாட்டைப் போல வேறு எந்த நாட்டில் 1008 சாதிகள் இருக்கின்றன? இல்லையே.

"இந்த சாதி பேதங்களை ஒழிக்கவேண்டும்; மக்கள் 'ஒன்றே குலம்' என்று ஒன்றுபட வேண்டும் என்றும் நாம் எடுத்துக் காட்டுகிறோம். அப்போது, இந்த சாதி முறைகள் எதை அடிப்படையாகக் கொண்டுள்ளன என்பதையும் நாம் சொல்லித்தானாக வேண்டியுள்ளது.

"சாதிகள் மதத்தினை அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன.

(4-ம் பக்கம் பார்க்க)

## திருச்சி மாவட்டத்தில் தீ விபத்து

### 350 குடிசைகள் சாம்பலான சோக விபரம்

திருச்சி, பிப். 25—

பெரும்பலூருக்கருகில் உள்ள செங்காணம் எனும் சிற்றூரில் நேற்று மாலை ஒரு பெரிய தீ விபத்து ஏற்பட்டு அதன் விளைவாக சுமார் 350 குடிசைகளுக்கு மேல் தீக்கிரையாகி சாம்பலாகி விட்டனவாம்.

அந்தக் கிராமத்திலேயே மொத்தம் 600 வீடுகள்தான் உண்டு இதில் அச்சிற்றூரிலுள்ள அரிசனச் சேரி முழுமையும் தீக்கிரையாகி விட்டதாம். இத்துடன் ஏராளமான தானியங்களும் சேதமடைந்தனவாம். குறைந்தது ரூ50,000-த்திற்கு மேற்பட்ட பொருட்சேதம் ஏற்பட்டிருக்குமென நம்பப்படுகிறது.

அடுப்பிலிருந்து கிளம்பிய ஒரு சிறு தீப்பொறியே இந்தப் பெரிய விபத்திற்குக் காரணமாயிருந்தது என்று கூறப்படுகிறது.

## உற்பத்தியின் உச்சநிலை!

1954-ல், பிரிட்டனில், 31,50,000 சைக்கிள்களும், 1,90,000 மோட்டார் சைக்கிள்களும் உற்பத்தியாயின. 1953-ல் உற்பத்தியான சைக்கிள்கள் 29,96 000; மோட்டார் சைக்கிள்கள் 1,52,935

வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியான சைக்கிள்கள் 21,00,000; மோட்டார் சைக்கிள்கள் 76,000 - இவற்றின் விலை மதிப்பு 8,63,00,000 பவுன்கள்.

## 1934-ல் சர்ச்சில் கூறிய ஆரூடம்!

### "விடுபட்ட இந்தியா அண்டையிலிருப்பவருடன் போரிட வரும்!"

### "அண்டையிலிருப்பவர் பெயர் கூற அவர் மறுப்பு!"

### டாக்டர் ஜெய்கர் தரும் தகவல்

பூனா, பிப். 24—

"இந்தியா சுதந்திரம் பெற்ற பிறகு, அண்டையிலிருப்பவருடன் சண்டைபோட வேண்டிவரும் என, 1934-ல், சர்ச்சில் என்னிடம் கூறினர்.

"அண்டையிலுள்ளவர்கள் யார் என நான் விளக்கம் கேட்டதற்கு அவர் பதில்கூற மறுத்துவிட்டு, அட்லி பதவிக்கு வந்த உடன் இந்தியா விடுதலை பெற்றுவிடும் என, வரும்பொருள் உரைத்தார்."

இவ்வுண்மைகளை பூனா பல்கலைக் கழகத் துணைவேந்தரான டாக்டர் எம் ஆர். ஜெய்கர், இங்குள்ள ரோட்டரியர்கள் கூட்டத்தில் பேசும்பொழுது குறிப்பிட்டுள்ளார்.

"சர்ச்சில் கூறியதை ஜின்னாவிடத்திலும், ஜபருல்லாகானிடத்திலும் நான் குறிப்பிட்டேன். அதற்கு அவர்கள் சர்ச்சிலின் கனவே அல்லாது அது வேறு ஒன்றுமில்லை எனச் சொன்னார்கள் என ஜெயகர் கூறிவிட்டு மேலும் பின் வருமாறு குறிப்பிட்டார்.

"'அண்டையிலிருப்பவர்' ஜின்னாவும் ஜபுருல்லாவும் சேர்ந்து உருவாக்கினவரை நீங்கலாக வேறு ஒருவரும் இல்லை. சர்ச்சிலின் ஆரூடம் வியப்புறும் வகையில் உண்மையாக நிகழ்ந்துவிட்டது."

இந்தியாவிலுள்ள இரும்புக் கனிச் சுரங்கங்களில் உற்பத்தியான கனி இரும்பின் மொத்த அளவு 1954 நவம்பரில் 3 31,893 டன்னாக இருந்தது. 1954, டிசம்பரில் 3,67,812 டன்னாக உயர்ந்துவிட்டது.

## மாநிலங்களை ஒழிக்க - டாக்டர் கரே போதனை!

### இந்துத் தலைவர் 'விராடபுத்திர' வீரம்!

*துப்பாக்கி ஏந்தி கோவா மீது படையெடுப்பாராம்!*

"மொழிவழி மாநிலங்களா, அல்லது உள்ள மாநிலங்கள் அனைத்தையும் ஒழித்துவிட்டு ஒரே மத்திய ஆட்சி அமைப்பை உருவாக்குவதா," என்பதுதான் இன்றுள்ள முக்கிய பிரச்சினையாகும்,"

—என, இந்து மகாசபைத் தலைவர் டாக்டர் கரே அவர்கள் மக்கள்சபையில் பேசும்பொழுது குறிப்பிட்டார்.

மாநிலங்களை ஒழித்துவிட்டு ஒரே ஆட்சி அமைப்பை உருவாக்க வேண்டும் என்ற தமது கருத்தையும் அவர் வலியுறுத்தினார்.

வெறுங்கையுடன் இல்லாமல், துப்பாக்கிப் பிடித்த வண்ணம் கோவா செல்லத் தாம் தயாராக இருப்பதாக மேலும் டாக்டர் கரே குறிப்பிட்டார்.

நம் நாடு
தி.மு.க. தினஇதழ் ஆசிரியர்.. அண்ணதுரை
சென்னை 26—2—1955 சனி

# கானல் வேட்டை!

இந்தியப் பேரரசின் தலைவர் டாக்டர் இராஜேந்திர பிரசாத் வழக்கம்போல மக்கள் சபைக் கூட்டத்தைத் துவக்கி வைத்து உரை நிகழ்த்தியுள்ளார்.

பொதுவாக, நாட்டு மக்களின் அரசியல் தலைவர், இம்மாதிரி, மக்களின் பிரதிநிதிகளடங்கிய கூட்டத்தில் பேசுகையில், நாட்டின் நானாவித பிரச்சினைகளையும் எடுத்துக் காட்டி, அந்தப் பிரச்சினைகளுக்குப் பரிகாரம் தேடுவதில் சர்க்கார் என்னென்ன நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளது என்ற விவரங்களையும் கூறுவது ஜனநாயக மரபு.

ஆனல், இந்தியப் பேரரசு, வேறு எல்லா நடவடிக்கைகளையும் போலவே, இதிலும் ஒரு தனி நடைமுறையைக் கையாண்டு வருகிறது.

இந்தியத் துணைக் கண்டத்தில் இன்று நிலவுகிற பிரச்சினைகள் பலதரப்பட்டவை மட்டுமல்ல—மிக ஆழமானவையுங்கூட!

இந்தியத் துணைக் கண்டத்தில் மொழிவழியாக மாநிலங்கள் பிரிக்கப்பட்டு, மாநில ஆட்சி மன்றங்கள் அந்தந்த வட்டார மொழிகளில் இயங்க வேண்டும் என்ற எண்ணம், பல மாநிலங்களில் இன்று போராட்ட உருவம் பெற்றிருக்கிறது.

திருவாங்கூர் தமிழ்ப் பகுதிகள் தமிழகத்துடன் இணைய வேண்டும் எனும் கோரிக்கைக்காக திரு-தமிழக காங்கிரஸ் நடத்திய போராட்டம்—அதனை ஒடுக்க பட்டம் தாணு பலி கொண்டது, பதினெரு உயிர்கள்.

சித்தூர், தமிழகத்துடன் இணைய வேண்டும் என்ற குரல்—இது மொழி வழிக் கிளர்ச்சியின் மற்றொரு பகுதி.

பர்லாகிமிடி—ஆந்திரருக்கா, ஒரியருக்கா?—அதற்காக எல்லோரும் ஆந்திரர் ஒரியரிடையே அடிதடி.

பம்பாய்—குஜராத்திகளுக்கா—மராத்தியருக்கா?—தகராறு முற்றிக்கொண்டு வருகிறது.

மேற்கு வங்கத்திற்கும் பீஹாருக்கும் இதே அடிப்படையில் சில தகராறுகள்.

இந்தியப் பேரரசு, தன் அதிகார பலத்தால் மட்டும் காப்பாற்றி வருகிற கற்பனையான இந்திய தேசிய ஐக்கியத்தை—ஒற்றுமையை இந்த மொழிவழி ஆட்சிக் கோரிக்கைகள் துளைத்துக்கொண்டிருக்கும் அளவு உரம் பெற்று வருகின்றன.

இந்தப் பிரச்சினை குறித்து டாக்டர் இராசேந்திரர், தமது உரையில் ஒன்றுமே குறிப்பிடவில்லை; 'மாநில புனரமைப்புக் குழு ஒன்றை நியமித்துத் தான் விசாரணை நடத்திவருகிறேமே, போதாதா?' என்று எண்ணி விட்டார் போலும்!

அடுத்து, இலங்கை வாழ் திராவிடர்கள், சிறுமை சிறைக, அங்குச் சின்னஞ்சிறு தீவில் கோலோச்சும் கொத்தலாவல சர்க்காரால் துரத்தப்படுகிறார்கள். துரத்தப்பட்டு தாயகம் ஓடிவரும் அவர்களை வரவேற்று வாழ்வளிக்க வேண்டிய பொறுப்பு யாருடையது என்பதே இன்னும் தெளிவாகவில்லை. ஓடி வந்தவர்கள், வாடி வதங்குகிருர்கள். இந்தப் பிரச்சினையின் கோர உருவம்—துரத்தப்படும் திராவிடரின் துயர கீதம், இந்தியக் குடியரசுத் தலைவரின் கண்ணுக்குத் தெரியவில்லை—காதில் கேட்கவில்லை!

தென்னுப்பிரிக்காவில் வாழும் இந்தியரின் அவலநிலை—இரத்த பாசத்தினுலாவது தலைவரின் உள்ளத்தைத் தொட்டு, உரையில் இடம் பெற்றதா என்ருல், அதுவுமில்லை!

நாட்டின் பல பகுதிகளில் மக்களுக்கு வேலையில்லை—அதனுல் வாழ்வில்லை; 'வேலை கேட்டு கெஞ்சாத இடமில்லை' மிஞ்சியது, 'இல்லை, போ; என்ற பதில்தான். கால் வயிறேனும் கஞ்சி குடிக்க, வஞ்சியரின் மானங் காக்க முழந்துணியேனும் பெற, கூதலுக்கும், பேய்க்காற்றின் ஊதலுக்கும் ஒதுங்க ஒரு ஒண்டிக் குடிசை பெற வழியில்லை;

பட்டினி, பசி, வறுமை வாட்டம், கண்ணீருடன் ஒன்றி நின்று, 'இவைதானு வாழ்வு—இவைதானு வாழ்வு?'—என்று ஓலமிடும் பல்லாயிரக் கணக்கான வேலையற்ரேரின் வேதனைக் குரல், அந்த 'ராஜ பவன' வாசியின் காதுகளுக்கு எட்டியதாகக் காணேம்!

இத்தனைக்கும் மேலாக, இந்தியத் துணைக் கண்டத்தின் பொருளாதார அடிப்படையான விவசாயம் வீழ்ச்சியுற்று வருகிறது; விவசாயப் பண்டங்களின் விலை அதலபாதாள வீழ்ச்சிபோல் வேகமாக வீழ்ந்து வருகிறது.

வீழ்ச்சி இன்னும் சற்று வேகமானல், இந்தியத் துணைக் கண்டத்தின் பொருளாதார அடிப்படையே ஆட்டம் கொடுத்துவிடும்!

என்றாலும், அந்தப் பிரச்சினை, தலைவரின் பேருரையில் இடம் பெறவில்லை.

இப்படி, இந்த இந்தியத் துணைக்கண்டத்தில் வாழும் மக்களின் வாழ்க்கை நிலைகள் பற்றிய பல்வேறு முக்கியமான பிரச்சினைகள் குறித்து குடியரசுத் தலைவர் ஏதும் குறிப்பிடாமலே உரை நிகழ்த்தியிருக்கிறர்—அவர் யாருடைய தலைமையில் ஆட்சி மன்றம் நடக்கிறதோ—அந்த மக்களின் பிரதிநிதிகளான மக்கள் சபை அங்கத்தினர்களின் கூட்டத்தில்!

அவர் குறிப்பிட்டிருப்பதெல்லாம், இந்தியா வெளி நாட்டில் பெற்றுவரும் பெருமையைப் பற்றித்தான்!

'போர்ப் புயல் இந்த பூகோள உருண்டையின் இடம் பெற்றிருக்கும் எங்காவது ஒரு இடத்தில் வீசதொடங்கினலும், அந்தப் புயல் அடங்க—அடங்குவதற்கான தென்றல் தவழச் செய்ய இந்தியப் பேரரசுதான் அழைக்கப்படுகிறது, பாரீர்! பாராட்டுங்கள், பாருங்கள் குவியும் காணீர்!'—என்பதைக் குறித்துத்தான்!

'பார்மோசாப் பிரச்சினையா?—நம் கருத்துத்தான் முதலிடம் பெறுகிறது! இந்தோ-சீனவா? அங்கு அமைதியைப் பாதுகாப்பவர்களே நாம்தான்! கொரியாவா—அங்கு நடைபெற்ற கொடிய போரினை—அதை ஒட்டி எழுந்த கொந்தளிப்பினை நிறுத்தியவர்களும் நாம்தான்!' என்ற வர்ணனைகளைத்தான்!

'நாம் வகுத்த 'பஞ்ச சீலக்' கொள்கையைப் பார் முழுதும் ஏற்றுக்கொண்டால் போர் மூளாது; சமாதானமும் சாந்தியும் நிலவும்; நாம் புரிந்த இந்த சமாதானப் பணி நமக்கு எத்தனை புகழையும், பாராட்டுகளையும் பெற்றுத் தந்துள்ளது! இந்தியாவின் நன் மதிப்பு உலகெங்கும் உயர்ந்திருப்பதற்குக் காரணமே நாம் செய்துவரும் உத்தமப் பணிதான்'—என்ற பரணியைத்தான்!

இப்படி, இந்தியா, வெளிநாடுகளில் பெற்றுவரும் பெருமையிலே மட்டும் பெரிதாக்கிக் காட்டியிருக்கிறர்—குடியரசுத் தலைவர் தமது உரையில்.

ஒரு நாட்டின் பெருமை அந்த நாட்டு மக்கள் பெற்றிருக்கிற நல்ல வாழ்வையும், அந்தப் பூரணவாழ்வில் மலரும் உயர் பண்பையும் பொறுத்ததே அன்றி, உலகுக்கு அது புரியும் உபதேசத்தின் அளவினலோ அல்லது தரத்தினலோ வரக்கூடியது அல்ல!

இந்தியப் பேரரசு இந்த நாட்டு மக்களின் நல்வாழ்வில் எவ்வளவு அக்கறை கொண்டிருக்கிறது என்பதைத்தான் குடியரசுத் தலைவரின் உரை நமக்குச் சொல்லுகிறது.

சொந்த மக்களின் நலம் பேணி, அவர்களின் பாராட்டினைப் பெற முடியாத இந்திய அரசாங்கம், உலகத்தில் விழுகிற ஓட்டை உடைசல்களை அடைப்பதற்காக தான் மேற்கொண்ட முயற்சிகளுக்கு வழக்கமாகத் தரப்படும் பாராட்டுகளைக் காட்டி, மக்களிடையே பாராட்டைப்பெற எண்ணுகிறது.

தாகமெடுத்தவன், அருகில் இருக்கும் நீருற்றைத் தேடாது, தண்ணீருக்குத் தவித்து நிற்பவரை விடுத்து, எங்கோ தெரியும் கானலைக் கண்டு அதனை வேட்டையாட முற்படுவது போலத்தான், இந்தியப் பேரரசின் போக்கு இருக்கிறது என்பதை டாக்டர் இராசேந்திரரின் உரை நமக்குச் சொல்லுகிறது.

## சிந்திரி உர உற்பத்தி தொழிற்சாலை

மேலும் ரூ. 10 கோடி செலவில் விரிவாக்கப்படுகிறது

சிந்திரி உர உற்பத்தி தொழிற்சாலையை மேலும் ரூ. 10 கோடி செலவில் விரிவாக்குவது என்று மத்திய அரசாங்கம் முடிவெடுத்துள்ளதாம்.

அம்மோனியம் சல்பேட், நைட்ரேட், யூரியா ஆகிய உயர்ந்த ரக உரங்களை அங்கு உற்பத்தி செய்வதற்காகத் திட்டம் தீட்டப்பட்டுள்ளதாம்.

விரிவுபடுத்துவதற்கான திட்டம், இத்தாலிய நிறுவனம் ஒன்றின் உதவியுடன் மேற்கொள்ளப்படுகிறதாம்.

இந்த உலகப் பிரசித்திபெற்ற இத்தாலிய நிபுணர்களே, அமெரிக்காவின் உர உற்பத்திச்சாலைக்கு ஆலோசனை வழங்கினராம்; அவர்களில் 50 பேர் அடுத்த மாதம் இந்தியா வருகின்றனராம்.

அடுத்த மூன்றாண்டுக்குள் இந்தப் புதிய திட்டம் நடைமுறைக்கு வந்துவிடுமாம்.

## வாழ்வளிக்கும் மேதை சென்னை வருகை!

சென்னை, பிப். 25—

குருடு, செவிடு, போன்ற வியாதிகளுக்குச் சிகிச்சை அளிப்பதில் பெயரெடுத்த டாக்டர் திருமதி ஹெலன்கெல்லர் மார்ச்சுத் திங்கள் 9-ம் தேதியன்று சென்னை வரவிருக்கிறர்.

அவர் சென்னையில் 5 நாட்கள் தங்கியிருந்து, நகரில் குருடர், செவிடர்களுக்கென நடைபெறும் பள்ளிகளைப் பார்வையிட்டு, பல பொதுக்கூட்டங்களிலும் கலந்துகொள்வார் எனத் தெரிகிறது.

உடலுறுப்புக் குறைவானவர்களின் கல்விக்காகவும், இதர வசதிகளுக்காகவும் சென்னை சர்க்கார் ஆண்டொன்றுக்கு ரூ. 1,93,000 செலவு செய்கிறது. இவர்களுக்கென மொத்தம் மாநிலத்தில் 11 பள்ளிகள் உள்ளன. இப்பள்ளிகளில் ஆண்களும், பெண்களுமாக மொத்தம் 959 குழந்தைகள் படிக்கின்றனர். இப்பள்ளிகள் மாநிலத்தின் பல பகுதிகளிலும் பரவலாக அமைந்துள்ளன. எனவே, இக்கல்வித்துறையில் அபிவிருத்தி காண்பதற்காக இரண்டு அதிகாரிகள் சென்னை சர்க்காரால் லண்டனுக்கு அனுப்பப்படவிருக்கிருர்கள்.

## நீர்வலிக் குண்டு விளைவிக்கும்கொடுமை

ஆஸ்திரேலிய விஞ்ஞானி கருத்து

"யுத்தத்தை ஒழிப்பது முக்கியமாக ஒரு அரசியல் பிரச்சினையாகும்; அதற்கான பரிகாரம் விஞ்ஞானிகளிடமில்லை—அரசியல்வாதிகளிடமும், இராஜ தந்திரிகளிடமும் உள்ளது," என்று, ஆஸ்திரேலியாவைச் சேர்ந்த பிரபல அணுசக்தி விஞ்ஞானியான எம். எல். ஒலிபென்ட் இங்கு குறிப்பிட்டிருக்கிருர்.

"மனிதன் இதுவரை உற்பத்தி செய்துள்ளவையில், நீர்வலி குண்டே மிகவும் பயங்கரமான கொடுமைகளை விளைவிக்கக் கூடியதாகும்.

"யுத்தம் ஒன்று வந்து, இந்த குண்டுகள் உபயோகிக்கப்பட்டால் இன்று நாம் காண்கிற மனித நாகரிகமே பூண்டோடு அழியும்; 'மனித சமுதாயம்' தொடர்ந்து நீடித்திருக்க வேண்டுமா—அல்லது பூண்டோடு அழிய வேண்டுமா—இதைத்தான் இந்த ஆயுதங்களை வைத்திருப்பவர்கள் இன்று முடிவு செய்ய வேண்டும்" என்றும் அவர் குறிப்பிட்டிருக்கிருர்.

## தஞ்சையில் சர்க்கரை ஆலை!

சென்னை, பிப். 24—

சென்னை மாநிலத்தில் நான்காவதாகவும், தஞ்சை மாவட்டத்தில் முதலாவதாகவும் துவக்கப்பெறும் சர்க்கரை ஆலையில் அடுத்த ஆண்டு இறுதிக்குள் உற்பத்தி துவங்கும் என்று தெரிகிறது.

தஞ்சை மாவட்டத்தில் உள்ள திருவாரூர் என்ற ஊரில் சுமார் ரூ. 60 லட்சம் செலவில் அந்த சர்க்கரை உற்பத்தித் தொழிற்சாலை நிறுவுவதற்கான திட்டம் ஒன்றை மத்திய சர்க்கார் அங்கீகரித்துள்ளதாம்.

சுமார் 4,000 ஏகர் நிலத்தில் கரும்பு பயிரிடுவதற்கான ஏற்பாடுகள் செய்யப்படுமென்று தெரிகிறது; ஆலை வரும் மாதத்தில் துவக்கப்படுவதற்கான வேலைகள் முடிவடைந்துவிடுமெனவும் கூறப்படுகிறது.

திருச்சி, தென்னார்காடு ஆகிய மாவட்டங்களில் மேலும் இரண்டு தொழிற்சாலைகளை நிறுவ, தனிப்பட்ட நிறுவனம் ஒன்று திட்டமிட்டுள்ளதாம்.

## 1955 வாக்காளர் பட்டியல் திருத்தம்

பொது மக்கள் ஒத்துழைப்பு அவசியம்

சென்னை, பிப். 25—

மாநிலத்திலுள்ள சட்ட சபை, மக்கள் சபை தொகுதி வாக்காளர் பட்டியலின் 1955-ம் ஆண்டின் திருத்தத்தை அரசாங்கம் மேற்கொண்டிருக்கிறது. 1955 மார்ச் மாதம் முதல் தேதியன்று 21 வயது அடைந்தவர்களும், 1954-ம் ஆண்டில் ஒரு தொகுதியில் 180 நாட்கள் வசித்தோ அல்லது வீட்டுக்குச் சொந்தக்காரராயிருந்தாலோ அவர் அந்தத் தொகுதியில் வாக்காளராக உரிமை பெறுகிறர். வேறு விதத்தில் அவர் வாக்காளராவதினின்றும் சட்டப்படி தடுக்கப்பட்டிருக்கலாகாது என்று செய்தி இலாகா டைரக்டர் அறிவித்துள்ளார்.

சென்னை நகரம், நீர்ப்பாசன அல்லது நீர்விசைத் திட்ட வேலைகள் நடைபெறும் பிரதேசங்கள், சைதாப்பேட்டை, குடியாத்தம், கலசபாக்கம், ஆரணி, திருக்கோயிலூர், பன்ருட்டி, செஞ்சி, உத்தானப்பள்ளி, பெரம்பலூர், மணப்பாரை, லால்குடி, ஆடுதுறை, அறந்தாங்கி, நன்னிலம், திண்டுக்கல், ஆத்தூர், கம்பம், ஸ்ரீவில்லிபுத்தூர், காரைக்குடி, தூத்துக்குடி, அம்பாசமுத்திரம், தென்காசி, மட்டனூர், கன்னனூர், ஆலத்தூர், பெரிந்தால், மன்னு, பெரம்பரா, மங்களூர், பிரமாவரம் முதலிய தொகுதிகளிலும் தீவிரமான வேலைகள் நடைபெறும்.

1955 மார்ச் முதல் தேதியிலிருந்து 31 தேதி வரை சென்னை நகரிலும், இதர மாவட்டங்களில் எப்ரல் 15-தேதி வரையிலும் புள்ளி விவரம் சேகரிப்பவர்கள் வேலை செய்வார்கள். இதர பிரதேசங்களில் சாதாரண முறையில் திருத்தங்கள் செய்யப்படும். திருத்த வேலைகள் முடிந்த பிறகு பூர்வ பட்டியல்களும் திருத்தங்களும் பொது மக்களுக்கென பிரசுரிக்கப்படும்.

இது பொதுத் தேர்தலுக்கு முந்திய ஆண்டாகும்; எனவே, இவ்வாண்டுத் திருத்தம் மிக முக்கியமானதென்று தேர்தல் குழு தெரிவிக்கிறது; எனவே, இந்த ஆண்டுத் திருத்தத்தில் பொது மக்கள் ஒத்துழைப்பு அதிகம் எதிர்பார்க்கப்படுகிறது. திருத்தம் பிரசுரிக்கப்படும்வரை காத்திராமல் ஒவ்வொருவரும் தங்கள் உரிமைகளையும், ஆட்சேபங்களையும் முன்கூட்டியே தெரிவிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளப்படுகிருர்கள்.

## பெண்களின் கூட்டு முயற்சி

தீப்பெட்டி தொழிற்சாலை துவங்குகிறது

புதுடெல்லியில் பெண்கள், புகை பிடிப்போர் ஆகியோர் தயாரிக்கும் தீப்பெட்டிகளை உற்பத்தி செய்யும் தொழிற்சாலை ஒன்று, கூட்டுறவு முறையில் அமையவிருக்கிறதாம்.

மத்திய தர வர்க்கப் பெண்கள் இந்தத் தொழிலில் பெரும்பாலும் ஈடுபடுவார்களாம். 'சமாஜ் கல்யாண்' என்ற பெயரில், ஒரு பெண்மணி கையில் குழந்தையுடன் காட்சி தரும் 'லேபிளுடன்', அவர்கள் தயாரிக்கும் தீப்பெட்டிகள் 'மார்க்கெட்'டிற்கு வரும் எனத் தெரிகிறது.

மத்திய சமூக க்ஷேம நல போர்டார் இந்தத் தொழிற்சாலையைத் துவங்குகிருர்கள் — மத்திய தர வர்க்கத்தினர் இன்னும் சற்று உயர்ந்த வாழ்க்கை நடத்தவேண்டுமென்பதற்காக!

வேலை செய்யும் பெண்களின் பிரதிநிதிகள், வர்த்தகம், தொழில், நிதி ஆகிய இலாகாக்களின் பிரதிநிதிகள், க்ஷேம நல போர்டு அங்கத்தினர்கள் ஆகியோரை உள்ளடக்கிய கூட்டுறவு சங்கம் இத்தொழிற்சாலையை மேற்பார்க்கும் என்று கூறப்படுகிறது.





# கழகச் செய்திகள்

## சின்ன சேலத்தில் தி. மு. கழக பொதுக்கூட்டம்

28—1—55 மாலை 6 மணிக்கு தி. மு. கழகச் சார்பில், தோழர் க. பெ. நெடுமாறன் தலைமையில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் தோழர் இஸ்மாயில், ந. இராமசாமி ஆகியோர் சொற்பொழிவாற்றினர்.

## திட்டை—மாயூரம் தி. மு. கழகம்

17—2—55 மாலை 6 மணிக்கு, கழகச் சார்பில், தோழர் குஞ்சிதம் தலைமையில் நடைபெற்ற கழகப் பொதுக் கூட்டத்தில், தோழர்கள் கே. எஸ். சௌந்தராசன், என் கிட்டப்பா ஆகியோர் சொற்பொழிவாற்றியதும் தோழர் என் வி. நடராசன் அவர்கள், திராவிடத்தின் சமூக, அரசியல், பொருளாதார விடுதலை குறித்து தக்க மேற்கோள் காட்டியும், திராவிட நாடு திராவிடருக்காக வேண்டியதின் அவசியம் குறித்தும் சொற்பொழிவாற்றினர்.

## பொன்மலை — மேலக் கற்கண்டார் கோட்டை தி. மு. க. (கிளை)

6—2—55 காலை 11 மணிக்கு, தோழர் ஏ. சுந்தரம் தலைமையில் நடைபெற்ற கழக உறுப்பினர் கூட்டத்தில், தோழர் கண்ணதாசன் அவர்களது தந்தையார், விருதுநகர் தோழர் எம். எஸ் பெரியசாமி ஆகியோரது மறைவுக்கு அனுதாபம் தெரிவித்துக் கொள்ளப்பட்ட பின்னர், மார்ச்சு மாத இறுதிக்குள் கழக ஆண்டு விழாவை நடத்துவதென்றும் தீர்மானிக்கப்பட்டது. தோழர் மு மாணிக்கம் கழகத் துணைச் செயலாளராகத் தற்காலிகமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார்.

## அம்மனூரில் தி. மு. கழகத் துவக்கம்

13—2—55 மாலை 9 மணியளவில், இவ்வூரில் புதிதாகத் துவக்கப்பட்ட தி மு. கழகத்திற்கான கழக நிர்வாகிகள் தேர்தல் கூட்டம் தோழர் டி. எஸ் கல்யாணசுந்தரம் தலைமையில் நடைபெற்றது:— செயலாளர்: வ. நடராசன்; துணைச் செயலாளர்கள்: கோ. ரெங்கசாமி; ரா. வைரப்பன்; பொருளாளர்: தி. காளியப்பன்; மாவட்டப் பிரதிநிதி: ரா. ரெங்கசாமி; செயற் குழு உறுப்பினர்கள்: வி. நடராசன், கோ. ரெங்கசாமி, மு. ரெங்கசாமி, ரா. வைரப்பன், தி. காளியப்பன், ரா. ரெங்கசாமி, நா. வடிவேல், வ. குழந்தைவேல், கோவிந்தராசு, ரெ. பன்னீர்ச்செல்வம், கு குஞ்சுராமன்.

பின்னர் மார்ச்சு திங்கள் 3-வது வாரத்தில் கழகப் பொதுக்கூட்டம் ஒன்று நடத்துவதெனவும் தீர்மானிக்கப்பட்டது.

அன்று (13—2—55) மாலை 6 மணிக்கு, தோழர் வி. நடராசன் தலைமையில் நடைபெற்ற கழகப் பொதுக்கூட்டத்தில், தோழர்கள் ஆர். இராசகோபால், ந. தர்மலிங்கம், வ. மோகன், டி. எஸ். கல்யாணசுந்தரம், முத்துகிருஷ்ணன் ஆகியோர் சொற்பொழிவாற்றினர்.

## திட்டை (சீர்காழி) யில் கழகப் பொதுக்கூட்டம்

17—2—55-ல், இவ்வூர் தி. மு. கழகச் சார்பில், தோழர் குஞ்சிதம் தலைமையில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் தோழர் என். வி. நடராசன் அவர்கள், தற்கால அரசியலைப் பற்றியும், சமுதாயத்திலுள்ள கேடுகளைப் பற்றியும் நீண்டதோர் சொற்பொழிவாற்றினர். கூட்டத் துவக்கத்தில் தோழர்கள் கிட்டப்பா, சௌந்திராசன் ஆகியோரும் சொற்பொழிவாற்றினர்.

## நாமக்கல்லில் தி. மு. கழகப் பொதுக்கூட்டம்

6—2—55 மாலை, இவ்வூரில் திரு. வி. க. பாறையில், கே வி. வி. ஆர். மேடையில், தோழர் சி. கந்தசாமி தலைமையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில், தோழர் கே வி. கே இராமசாமி, 'தி மு கழகத்தில், நாம் ஏன் உறுப்பினர்கள் ஆகவேண்டும்?' என்பது பற்றி பேசிய பின், தோழர் இரா நெடுஞ்செழியன், 'திராவிட நாடு தேவை ஏன்?' என்பது பற்றி நீண்டதோர் சொற்பொழிவாற்றினர். தோழர் நெடுஞ்செழியன் அவர்கட்கு கைத்தறி ஆடைகள் அணிவிக்கப்பட்டன. பின்னர், தோழர் நெடுஞ்செழியன் அவர்களிடம், 'நம் நாடு' இதழ் வளர்ச்சிக்காக ரூ - 8—8—3 அன்பளிக்கப்பட்டது.

## தி. மு. கழகப் பிரச்சாரக் கூட்டம்

பெரிய ஒபுலாபுரத்தில், 29-1-55 இரவு 8½ மணிக்கு அவ்வூர் பெரியார் திரு. ஒ. சங்கப்பா தலைமையில் நடைபெற்ற கழகப் பிரச்சாரக் கூட்டத்தில், தோழர்கள் ப. செ ஜயமணி, இராதாமணாளன், ஆ பெ. கணேசன், திருமாவளவன், ஒ மு. ஆறுமுகம் ஆகியோர் தி.மு. கழகத்தின் சட்ட திட்டங்கள் பற்றியும், திராவிட நாடு பிரியவேண்டியதின் அவசியம் பற்றியும், இன்றைய ஆட்சியினரின் அட்டூழியங்கள், வட நாட்டினரின் சுரண்டல் ஆரியரின் சூழ்ச்சி பற்றியும் விரிவாகச் சொற்பொழிவாற்றினர்.

* * *

17—2—55 இரவு 8 மணி அளவில், கும்மிடிப்பூண்டி தி. மு. க. சார்பில், ஆத்துப்பாக்கம் கிராமத்தில், தோழர் ஆறுமுகம் தலைமையில் நடைபெற்ற கழகப் பிரச்சாரக் கூட்டத்தில், தோழர் இராதாமணாளன் அவர்கள், வட நாடு தென்னாட்டை பொருளாதாரத் துறையில் எவ்விதங்களிலெல்லாம் புறக்கணிக்கிறது என்பது பற்றியும், சமுதாயத்தில் ஆரியர்கள் உண்டாக்கிய கேடுகளைப் பற்றியும், திராவிட நாடு பிரிய வேண்டியதின் அவசியத்தைப் பற்றியும் சொற்பொழிவாற்றினர்.

## செ. பாளையம் தி.மு. கழகம்

16—2—55 மாலை 7 மணியளவில், தோழர் இரா. முருகேசனார் தலைமையில் நடைபெற்ற கழகச் செயற்குழு கூட்டத்தில், தோழர் வை. சிவப்பிரகாசம் செயலாளராகவும், டி. தண்டபாணி பொருளாளராகவும் நியமிக்கப்பட்டனர்.

பின்னர், இம்மாத முடிவிற்குள் இவ்வூரில் கழகப் பொதுக்கூட்டம் ஒன்று நடத்துவதென்றும், கைத்தறி ஆடையின் சிறப்புக்களை பொது மக்களிடம் எடுத்துக்கூறி அவர்கள் கைத்தறி ஆடைகளையே அணிவதற்குச் செய்ய வேண்டிய காரியங்களில் ஈடுபட கழகத் தோழர்களை கேட்டுக்கொண்டும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## தேவத்தூரில் தி. மு. கழக பொதுக்கூட்டம்

18—2—55 மாலை 7 மணிக்கு, மொல்லம்பட்டி தி. மு. கழகச் சார்பில், தோழர் சுப்பையா தலைமையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில், தோழர்கள் இரா. நெடுஞ்செழியன், எம். எஸ் இராமசாமி ஆகியோர் 'சமுதாயம்' பற்றியும், 'திராவிட நாட்டுப் பிரிவினை ஏன்?' என்பது பற்றியும் பேசினர். தோழர் இரா. நெடுஞ்செழியன் அவர்களுக்கு, தேவத்தூர் தி. மு. கழகச் சார்பில் 101 காலணக்கள் கொண்ட பணமுடிப்பும், மஞ்சநாய்க்கன்பட்டி தி. மு கழகச் சார்பில் 101 காலணக்கள் கொண்ட பணமுடிப்பும் அன்பளிப்பாகக் கொடுக்கப்பட்டது.

## பழனியில் தோழர் இரா. நெடுஞ்செழியன்

17—2—55 மாலை 4 மணியளவில் பழனி நகரசபை உயர்நிலைப் பள்ளி தமிழ் மாணவர் மன்றச் சார்பில் தோழர் இரா. நெடுஞ்செழியன் அவர்கட்கு, பழனி நகரசபைத் துணைத் தலைவர் திரு. இராசகோபால் தலைமையில் ஒரு வரவேற்பு அளிக்கப்பட்டது மாணவர்கள் சார்பில் வாழ்த்து மடல்களும், 101 காலணக்கள் கொண்ட மாலையும், படிப்பகங்கள் சார்பில் மலர்மாலைகளும் கைத்தறி ஆடைகளும் அணிவிக்கப்பட்டன. பின்னர் தோழர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள், 'சங்க கால இலக்கியங்கள்' எனும் தலைப்பில் சொற்பொழிவாற்றினர்.

* * *

## தி. மு. கழகப் பொதுக் கூட்டம்

அன்று மாலை 7½ மணியளவில் தேரடித் திடலில் கழகச் சார்பில் தோழர் சிவநேசம் தலைமையில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் தோழர் எம். எஸ். இராமசாமி சிறிது நேரம் சொற்பொழிவாற்றியதும், தோழர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள் தெற்கு—வடக்கின் தற்போதைய நிலைகளைத் தெள்ளத் தெளிய எடுத்துக்கூறி, திராவிடம் பிரிய வேண்டியதின் அவசியத்தையும் விளக்கிப் பேசினர்.

கூட்டத்தில், தோழர் இரா. நெடுஞ்செழியன் அவர்கட்கு பல கிளைக் கழகங்கள் சார்பில் மலர் மாலைகளும், கைத்தறி ஆடைகளும் அணிவிக்கப்பட்டன.

## பாளையம்வட்ட தி.மு. கழக பொதுக்குழு கூட்டம்

16—2—55 மாலை 4 மணிக்கு, பாளையம் வட்ட தி மு. கழகப் பொதுக் குழுக் கூட்டம், குஜிலியம்பாறையில், தோழர் ஏ. ராஜகோபாலன் தலைமையில் நடைபெற்றபோது, பாளையம் வட்டத்தில் தி. மு. கழகக் கமிட்டி ஏற்படுத்தி, பின்னர், கமிட்டிக்கு செயலாளராக தோழர் எம்.ஆர். தனுஷ்கோடியையும், துணைச் செயலாளராக ஏ. ராஜகோபாலன், பொருளாளராக எம். ரெங்கசாமி, விளம்பர உறுப்பினராக கே. வெங்கிடுசாமி; துணை உறுப்பினராக வையாபுரி; மாவட்ட உறுப்பினராக எம். வீராச்சாமி ஆகியோரையும் தேர்ந்தெடுக்கப்பட்டது. பின்னர் கழக முதலாவது ஆண்டு விழாவை குஜிலியம்பாறையில் நடத்துவதெனவும், அவ்வாண்டு விழாவை யொட்டி, 'நச்சுக் கோப்பை' — நாடகம் நடத்துவதெனவும் தீர்மானிக்கப்பட்டது.

## அக்கரை வட்டத்தில் தி. மு. கழகத் துவக்கவிழா

6—2—55 காலை 10 மணியளவில், அக்கரை வட்டத்தில் தி. மு. கழகத் திறப்பு விழா சிறப்புற நடைபெற்றது. தோழர் க. அறிவழகன், கழகக் கட்டிடத்தைத் திறந்து வைத்துக் கழகக் கோட்பாடுகளை விளக்கிப் பேசினர்.

## காரைக்காலில் பொங்கல் விழா பொதுக்கூட்டம்

6—2—55 மாலை 6: மணியளவில், தோழர் சின்னப்பா தலைமையில் நடைபெற்ற பொங்கல் விழாப் பொதுக்கூட்டத்தில் தோழர்கள் சொக்கலிங்கம், க. அறிவழகன் ஆகியோர் பேசிய பின் தோழர் தில்லை வில்லாளன் பொங்கல் விழா பற்றியும், சமுதாய அரசியல் நிலை குறித்தும், ஆவடி மாநாடு குறித்தும் சொற்பொழிவாற்றினர் பின்னர் எதிர்பாராதவிதமாக அங்கு வந்த தோழர் என். வி. நடராசன் அவர்கள் நீண்டதோர்சொற்பொழிவாற்றினர். பின்னர், கூட்ட இறுதியில், பிரெஞ்சிந்திய விடுதலைப் போராட்டத்தில் உயிர் துறந்த அனைவருக்கும் அனுதாபமும் பாராட்டும் தெரிவித்துக் கொள்ளப்பட்ட பின், தீர்மானங்கள் பல நிறைவேற்றப்பட்டன.

# செய்திச் சுருள்

★

## அரசாங்க போக்குவரத்து ஊழியர் கூட்டம்

13—2—55 மாலை 6 மணிக்கு நடைபெற்ற மேற்படி சங்க உறுப்பினர் கூட்டத்தில், சங்கப் பொதுக் காரியதரிசி திரு. எம். சித்தாராம் நாயுடு தனக்கு சர்வாதிகாரம் கொடுக்கும்படி பொதுக் குழுவைக் கேட்டுக்கொண்டதை அனுமதிக்க முடியாதென எதிர்ப்பு காட்டப்பட்டதைக் கண்டு பொதுக் காரியதரிசி அவர்கள் கூட்டத்தை கலைத்து வெளியேறினர்.

பின்னர், நடைபெற்ற கூட்டத்தில் தோழர் குஞ்சிராமகுருப் பொதுக் காரியதரிசியின் போக்குகளைக் கண்டித்துப் பேசினர்.

## நாகப்பட்டினம் வள்ளுவர் மன்றம்

13—2—55 இரவு 7 மணிக்கு மன்றக் கட்டிடத்தில், தோழர் டி. பி சிவம் தலைமையில் நடைபெற்ற கூட்டத்தில் நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்:— தலைவர்: பி. அய்யன் பெருமாள்; துணைத் தலைவர்: பண்டித பி. முத்தசாமி; செயலாளர்: வி. முருகையன்; துணைச் செயலாளர்: நாகை கணேசன்; பொருளாளர்: சேதுப்பிள்ளை.

## நீத்தார் நினைவு நாள்

பூவிருந்தமல்லி தி. மு. கழகத் தோழர் ர. இராசாபாதரின் தந்தையார் அ. இரத்தினம் அவர்கள் நினைவு நாள் 15—2—55ல் அவரது இல்லத்தில் நடைபெற்றது. இதன் நினைவாக 'நம் நாடு' இதழ் வளர்ச்சிக்கு ரூ. 1 அன்பளிக்கப்பட்டது. வரப்பெற்ரேம் – நன்றி – பொறுப்பாளர்.

## அரிசிகரை தோழமைக் கழக ஆண்டு விழா

16—2—55 இரவு 7 மணிக்கு திரு. எஸ். ஜே உசேன் தலைமையில் நடைபெற்ற மேற்படி ஆண்டு விழாவில் தோழர் சி. பி. சிற்றரசு அரியதோர் சொற்பொழிவாற்றினர். பின்னர், இக்கர் சூர்யகலா இசைக் குழுவினரால் இன்னிசை நடைபெற்றது. பின்னர் தோழர் எஸ். ஜே. சந்தர் பேசினர்.

## நெடுஞ்செழியன் மன்றம் அமைப்பு

தேனியிலுள்ள திராவிடர் இளைஞர் குழாத்தினர் 'நெடுஞ்செழியன் மன்றம்' அமைத்துள்ளனர். 18—2—55-ல் நடைபெற்ற மன்ற உறுப்பினர்கள் கூட்டத்தில் மன்ற நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்:— செயலாளர்: ஆ. சங்கலிங்கம்; துணைச் செயலாளர்: தே. விசுவாசம்; பொருளாளர்: மு. தங்கராசு; மாவட்டப் பிரதிநிதி: கு சோமநாதன்; விளம்பர உறுப்பினர்: ரெ. சமுத்திரக்கனி. பின்னர், மார்ச்சுத் திங்கள் இறுதிக்குள் மன்றத் துவக்க விழாவை நடத்துவதென்றும், மற்றும் சில தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டன.

## சங்கரன் முன்னேற்ற பயிற்சிக் கல்லூரி தினம்

20—2—55 ஞாயிறு மாலை 5 மணிக்கு திருச்சி, தெப்பக்குளம் கருணாநிதி பூங்காவில் நடைபெற்ற மேற்படி கல்லூரி தினத்தில், தோழர் பாரதிதாசன் திருக்குறள் பற்றி விளக்கவுரை தக்க சான்றுகளுடன் தந்தார். அவருடைய சொற்பொழிவு இரவு 8 மணிக்கு முடிந்தது. உடன் அவர் முன்னிலையில் திரு. எம். கே. கோவிந்தராசபாகவதர் தம் குழுவினருடன் பாரதிதாசன் இயற்றிய பாடல்களை பாடினர். இசைவிருந்து இரவு 11 மணிக்கு முடிவுற்றது. கல்லூரி மாணவர் சுந்திராசன் நன்றி கூற விழா நிகழ்ச்சி இனிது முடிவுற்றது.

## டாக்டர் நடேசனர் நினைவு நாள் பொதுக் கூட்டம்

18—2—55 மாலை 7 மணிக்கு குன்னத்தூர் தேர்த் திடலில் என். டி. இராமசாமி தலைமையில் மேற்படி நினைவு நாள் பொதுக் கூட்டம் நடைபெற்றது. தோழர்கள் கே. என். நடராசன், க. அன்பரசு பேசியபின், தோழியர் சத்தியவாணிமுத்து டாக்டர் நடேசனர் செய்த சேவை குறித்தும், ஆவடி காங்கிரசின் அம்பலம் குறித்தும் பேசினர்.

## அழகிரி நினைவு மன்றம் துவக்கம்

20—2—55-ல், தோழர் எம். எஸ். ஏ. காதர் தலைமையில் சென்னை 81-வது வட்டத்தில் அழகிரி நினைவு மன்றம் நிறுவப்பட்டு நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்:—தலைவர்: காந்தராஜ்; துணைத் தலைவர்: எம். எஸ். ஏ. காதர்; செயலாளர்: இரா. சேரன்; துணைச் செயலாளர்: க. மணி; பொருளாளர்: அன்புவிழி; செயற்குழு உறுப்பினர்கள்: ஏ. மணி, நிதயாளன், கருமுகில், செல்வம், இராஜ், அ. நித்தியானந்தம்.

## பிறப்பு—பெயர் சூட்டல்

18—2—55ல், பெங்களூரில் நடைபெற்ற தி. மு. கழக மாநாட்டின்போது, தோழர் கிருஷ்ணன்—தோழியர் தெய்வயானை அவர்களது ஆண் குழந்தைக்கு, பொதுச் செயலாளர் அண்ணதுரை அவர்கள் 'முத்து' என்று பெயரிட்டார். இதன் நினைவாக 'நம் நாடு' இதழ் வளர்ச்சிக்கு ரூ. 1 அன்பளிக்கப்பட்டது - பெற்றுக்கொண்டோம்-நன்றி-பொறுப்பாளர்.

* * *

தோழர் எஸ். முனுசாமி அவர்களது பெண் மகவுக்கு பொதுச் செயலாளர் அண்ணு அவர்களால் 'மல்லிகா' என்று பெயர் சூட்டப்பட்டது.

* * *

28—1—55 காலை 7 மணிக்கு அம்மன்புரம் தி. மு. கழகத் தோழர் கணபதி அவர்களின் துணைவியார் தோழியர் மாசானம் அம்மாள் ஓர் ஆண் மகவுக்குத் தாயானுர். 9—2—55-ல், அம்மகவுக்கு 'அன்பழகன்' என்று பெயரிடப்பட்டது. இதன் நினைவாக 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ. 1 அன்பளிக்கப்பட்டது—வரப் பெற்ரேம்—நன்றி—பொறுப்பாளர்.

* * *

பூக்குளம் தி. மு. கழக செயலாளர் எஸ். எஸ். மகாலிங்கம் வாழ்க்கைத் துணைவியார் சுப்புலட்சுமி 13—1—55ல் ஓர் ஆண் மகவுக்குத் தாயானுர். 15—2—55ல் குழந்தைக்கு 'தமிழழகன்' என்று பெயரிடப்பட்டது. இதன் நினைவாக 'நம் நாடு' இதழுக்கு ரூ. 1 அன்பளிக்கப்பட்டது —வரப்பெற்ரேம்-நன்றி-பொறுப்பாளர்.

* * *

சீர்காழி வட்டாரம் தி. மு. கழகப் பொருளாளர் தோழர் இரா. அகோரம் வாழ்க்கைத் துணைவியார் தோழியர் தங்கபாப்பிக்கு 14—2—55ல் ஓர் மகவு பிறந்தது. தாயும் சேயும் நலம். இதன் நினைவாக 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ. 1 அன்பளிக்கப்பட்டது—வரப்பெற்ரேம்-நன்றி-பொறுப்பாளர்.

## திருமணம்: திருத்தம்

23—2—55 'நம் நாடு' இதழில் திருமணங்கள் என்ற தலைப்பில், சென்னை புதுப்பேட்டை பொதுமக்கள் சங்கச் சார்பில், 11—2—55-ல் நடைபெற்ற தோழர் தங்கதுரை — தோழியர் இலக்குமி திருமண நினைவாக 'நம் நாடு' இதழ் வளர்ச்சிக்காக ரூ. 1 நன்கொடை அளிக்கப்பட்டுள்ளதென வெளியாகியுள்ளது. அதை ரூ. 2 என்று திருத்தி வாசித்துக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறேம். (கு-ர்.)

# சென்னை மாநிலத்தில் மின்சாரத் திட்டம்

## கடனாக டில்லி பணம் தருகிறதாம்

சென்னை, பிப். 25—

1954—55, 55—56-ல், ரூ. 3 கோடி செலவில் மேற்கொள்ளப்படவிருக்கும் சென்னை சர்க்கார் கிராம மின்சாரத் திட்டங்களுக்காக, இந்திய சர்க்கார், முதலாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஒதுக்கப்பட்டுள்ளதற்கு மேலும், முதல் தவணையாக ரூ. 150 - லட்சம் கடனாகத் தர ஒப்புதல் தந்துள்ளதென மராமத்து இலாகா அமைச்சர் சென்னை சட்ட (மேல்) சபையில் தெரிவித்திருக்கிறார்.

இந்த 3 கோடி ரூபாயிலும் 1 கோடி ரூபாயை, கடந்த ஆண்டில் இந்திய சர்க்கார், 4 சத விகித வட்டியில் தந்துள்ளதென்றும், 1958-59-லிருந்து 7 ஆண்டுத் தவணைகளில் இதைத் திரும்பிக் கொடுத்து விடலாமென்றும் கூறினர்.

சமூக க்ஷேம நல திட்டப் பிரதேசத்தில் மின்சாரத் திட்டங்களை நிறைவேற்ற இந்திய அரசாங்க சமூக நல க்ஷேமத் திட்ட நிர்வாகிகள் ரூ. 30 லட்சம் கடனாகத் தர அனுமதி தந்துள்ளனராம்.

இவை தவிர, வேலை வசதி அதிகரிப்புக்காக திட்டக் குழுவின் திட்டங்களுக்காக ரூ. 397·50 இலட்சம் கடனாகத் தரவும் இந்திய சர்க்கார் ஒப்புதல் அளித்துள்ளதாம். இத்தொகையை 30 ஆண்டு காலத் தவணைகளில் கொடுக்க வேண்டும் என்றும், முதல் ஐந்தாண்டு காலத்திற்கு வட்டித் தொகை மட்டும் செலுத்தினால் போதும் என்றும் கூறினர்.

### மின்சார விநியோகத் திட்டங்கள்

ஈரோடு—திருச்சி மூன்றாது 'சர்க்யூட்'டை மாற்ற ரூ. 13·25 இலட்சம் செலவில் 110 கிலோவாட் மின்சக்தியுள்ள பாதை; சிங்காரப் பேட்டை—விழுப்புரம்: 110 கிலோவாட் மின்சாரப்பாதை; சிங்காரப்பேட்டை—வேலூர்: ரூ. 93.43 லட்சம் செலவில் 66 கிலோவாட் விஸ்தரிப்பு; கோவை—மதுக்கரை—பாலக்காடு ரூ. 39 65 லட்சம் செலவில் 66 கிலோவாட் விஸ்தரிப்பு; செங்கற்பட்டு—மதுராந்தகம் ரூ. 8.44 லட்சம் செலவில் 33 கிலோவாட் மின்சார விஸ்தரிப்புத் திட்டமும், ரூ 94 லட்சம் செலவில் மின்சார விநியோகமும்

மேற்குறிப்பிட்ட இத்திட்டங்கள் யாவும் மின்சார விநியோகப் பாதைத் திட்டங்களுடனும், மின்சார விநியோகத் திட்டங்களுடனும் சேர்த்துக் கொள்ளப்படும்.

இவை தவிர தென்னாற்காடு, வட ஆற்காடு, சேலம் மாவட்டங்களிலுள்ள தேசிய விஸ்தரிப்புத் திட்டப் பிரதேசங்களிலுள்ள நகர்களிலும், கிராமங்களிலும் ரூ. 47·29 லட்சம் செலவிலும், செங்கற்பட்டு மாவட்டத்தில் ரூ. 24.06 லட்சம் செலவிலும் மின்சார வசதிகள் செய்து தரப்படும் என்றும் தெரிவித்தார்.

தரப்படுகிற இந்தக் கடன்களை உபயோகித்து எந்தெந்த திட்டங்கள் நிறைவேற்ற எடுத்துக்கொள்ளப்படுமென்ற விவரத்தைக் கூற முடியாதென்றும், இவ்விஷயம் இன்னும் பரிசீலனையிலிருப்பதாகவும் அமைச்சர் கூறினர்.

என்றாலும், இக்கடன் தொகைகளை சர்க்கார் முழுவதுமாக உபயோகித்து கிராம மின்சாரத் திட்டங்களை நிறைவேற்றுமென்றும் கூறினர்.

## ஊர்வலத்தில் கலவரம்

சென்னை, பிப். 25—

நேற்று மாலை, சென்னை திருவல்லிக்கேணியில், சென்னை சிற்றுண்டிச் சாலை தொழிலாளர் சங்கத்தினரின் ஊர்வலம் ஒன்று சென்று கொண்டிருக்கையில், ஒரு சிற்றுண்டிச் சாலைக்கு அருகில் நின்றுகொண்டிருந்த சிலர் ஊர்வலத்தினர்மீது கற்களையும், சோடாபுட்டிகளையும் வீசியதாகவும், இதனால் ஏற்பட்ட கலவரத்தின் விளைவாக 7 பேர் காயமுற்றனர் என்றும் தெரிகிறது. உடனே போலீசார் விரைந்து நிலைமையைச் சமாளித்திருக்கின்றனர். இதையொட்டி, போலீசார் இரண்டு பேரைக் கைது செய்து வழக்குப் பதிவு செய்துள்ளனராம்.

## வேலை பற்றிய 'சர்வே'

புதுடில்லி, பிப். 25—

இந்தியா முழுமையிலுமுள்ள தற்போதைய வேலை நிலைமை எப்படி இருக்கிறது என்பது குறித்து 'சர்வே' நடத்த இந்திய சர்க்கார் தீர்மானித்துள்ளனர் என்று இந்திய சர்க்கார் நிதியமைச்சர் தேஷ்முக் தெரிவித்திருக்கிறார்.

இந்த 'சர்வே,' மாநில சர்க்கார்கள் நடத்திய எல்லா 'சர்வே'க்களும் சேர்க்கப்பட்டுள்ளதாக இருக்கும். அனேகமாக இந்த வேலை இன்னும் 4 அல்லது 5 - மாதங்களில் பூர்த்தியடைந்து விடுமென்று அவர் கூறியிருக்கிறார்.

## பிற்பட்ட வகுப்பினர்

### சட்ட சபையில் விளக்கம்

"பிற்பட்ட வகுப்பினரின் எல்லாப் பிரச்சினைகளும், இனிமேல், வகுப்பு அடிப்படையிலே அல்லாமல், அவரவர் பொருளாதார பிற்பட்ட நிலைமையை அடிப்படையாகக் கொண்டே கவனிக்கப்படும்"

என்று, அமைச்சர் சுப்பிரமணியம் சென்னை சட்ட (மேல்) சபையில் கூறியிருக்கிறார்.

கல்வி சம்பந்தமாகப் பிற்பட்ட வகுப்பினர்களின் நிலைபற்றி எழுந்த ஒரு கேள்விக்குப் பதில் அளிக்கையில் அமைச்சர் ஏ. பி. ஷெட்டி, மருத்துவத் துறைக் கல்லூரிகளில், கடந்த 1952–53ல் 318 பேரும், 1953–54ல் 342 பேரும் சேர்த்துக்கொள்ளப்பட்டதில், தாழ்த்தப்பட்ட வகுப்பினர் முறையே 33 பேரும் 41 பேரும். பிற்பட்ட வகுப்பினர் முறையே 64 பேரும், 68 பேரும் சேர்த்துக் கொள்ளப்பட்டனர் என்றும், அவர்களுக்கு முறையே 15 சதவிகிதமும் 25 சதவிகிதமும் இடம் ஒதுக்கப்பட்டதென்றும் குறிப்பிட்டார்.

மேலும் அவர், 1951-ம் ஆண்டின் மக்கள் தொகைக் கணக்கை அடிப்படையாக வைத்துக் கொண்டே மாவட்ட வாரியாக மாணவர்கள் அனுமதிக்கப்படுகிறார்கள் என்றார்.

## நடமாடும் அலுவலகங்கள்!

மதனபள்ளி, பிப். 25—

தற்போதுள்ள நடமாடும் தபால் நிலையங்களைப்போல் (மோபைல் போஸ்ட் ஆபீஸ்) நடமாடும் ரெஜிஸ்தர் காரியாலயங்களையும் (மோபைல் ரெஜிஸ்டர் ஆபீஸ்) ஏற்படுத்துவதென ஆந்திர சர்க்கார் ஆலோசித்து வருவதாக அறிவிக்கப்படுகிறது.

இதன்படி, ஒவ்வொரு மாவட்டத்திற்கும் ஒரு மோட்டார் கார் தரப்பட்டு, அதில் ஒரு சப்-ரெஜிஸ்திராரும், ஒரு குமாஸ்தாவும் இருப்பர் என்றும், அவர்கள் கிராமங்களுக்கும் சென்று ரெஜிஸ்தர் வேலைகளை மேற்கொள்ளுவர் என்றும் கூறப்படுகிறது.

இவ்வேற்பாட்டை முதலில் பரீட்சை செய்வதற்காக, சித்தூர், நெல்லூர், ஸ்ரீகாகுளம் ஆகிய மாவட்டங்களில் இது அமுலுக்குக் கொண்டுவரப்படுமோம்.

## பொதுக் கூட்டம்

★

திருவள்ளூர்

(அழகிரி படிப்பகச் சார்பில் நடைபெறும்)

27—2—55 மாலை 5 மணிக்கு

தலைவர்: நாராயணன்

பேசுவோர்:

காஞ்சி கல்யாணசுந்தரம்

ஏ. எல். சி. கிருஷ்ணசாமி

டி. ஆர். வரதன்

### திருவள்ளுவர் இளைஞர் கழகம்

27—2—55 காலை 10 மணிக்கு, சென்னை, முத்தியாலுப்பேட்டை, இராசமன்னார் பாடசாலையில் திருக்குறள் வகுப்பு நடைபெறும். திரு. சி. முருகேசனார் விளக்கவுரையாற்றுவார்.

### அரசியல் வகுப்பு

27—2—55 காலை 9 மணிக்கு, சென்னை 42-வது வட்டம் தி. மு. கழகப் பணிமனை (எண் 4, நமசிவாய முதலி தெரு, திருவல்லிக்கேணி)யில், தோழர்கள் அன்பரசு, இளம்பரிதி ஆகியோர் 'நாகரீகங்கள்' என்பது பற்றி விளக்குவர்.

### சொற் பயிற்சிக் கூட்டம்

27—2—55 காலை 9 மணிக்கு, சென்னை, முத்தியாலுப்பேட்டை, எண். 17, சாலைவிநாயகர் கோயில் தெரு, முத்தமிழ் மன்றத்தில், தோழர் ம. வெ. நடராசன் தலைமையில், 'எண்ணம்' என்னும் பொருள் பற்றி தோழர்கள் பலர் பேசுவர்.

### திருமணங்கள்

27—2—55 காலை 8 மணிக்கு, சென்னை, தண்டையார்பேட்டை, எண் 101, விநாயகபுரம் (அலமேலு அம்மையார் அரங்கில்) தோழர் பொ. ராஜரத்தினம்—தோழியர் வே. சரஸ்வதி, தோழர் பொ. ஜீவரத்தினம்—தோழியர் நா. சந்திரகாந்தா திருமணங்கள் நடைபெறும். மணமக்களைப் பாராட்டி தோழர் சி. பி. சிற்றரசு பேசுவார்.

# வடநாட்டவர் வெள்ளையரின்......

(1-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

"இராமாயணம் என்ன சொல்கிறது, சம்புகன் என்ற 'சூத்திரன்' தவம் செய்தால் தனது மகன் இறந்துபட்டதாக ஒரு பார்ப்பனர் ராமனிடம் முறையிடுகிறார். ராமன் விபரமறிந்து, சூத்திரனாகிய சம்புகன் தவம் செய்தலாகாது என்று கூறி சம்புகனைக் கொன்று குவிக்கிறான். இது, இராமன், சாதி பேதங் கற்பித்தான் என்பதைத் தானே கூறுகின்றது.

"மக்கள் சாதிகளை விடுத்து ஒன்றுபட முடியாதவாறு, சாதிப் பிரிவினைகளை புராண ஏடுகளும், மதமும் இன்னபிற கடவுட் தத்துவங்களும் வலியுறுத்துகின்றன என்பதினால்தான், தி. மு. கழகம், அவற்றைச் சாடவேண்டியுள்ளது.

"சாதிபேதம் தொலைய, புராணப் புளுகுகள் ஒழிக்கப்படவேண்டும் என்று தி. மு. கழகம் எடுத்துச் சொல்கிறது.

"நாம், பல சாதிகளாய் பிரிந்து கிடப்பதினால்தான், வாழ்க்கையில் முன்னேறமுடியாது தவிக்கிறோம்.

"எனவே, பேதங்களை ஒழிக்க, புராணங்களை—அவை கற்பிக்கும் கடவுளர்களை நம்பாதீர். ஒரே கடவுள் உண்டென நம்புவீர் என்றும் நாம் வலியுறுத்துகிறோம்.

"இங்கிலாந்தில் ஒரு மன்னன் தன்னை, ஆண்டவன் அனுப்பினான்; தான் தேவாம்சம் பெற்றவன்; மக்களை ஆள்வதற்காகவே ஆண்டவனால் அனுப்பப்பட்ட பிறவி; எனவே தான் செய்யும் கொடுமைகளை யாரும் கேட்கக் கூடாதெனக் கூறி அக்கிரமங்கள் பல புரிந்தான்.

"மக்கள் அவனைத் துரத்தினார்கள் பின்னால்.

"அதேபோல, பிரான்சிலே வாழ்ந்த மன்னன் ஒருவன், தானே தான் தேசம் என்றான். அவனையும் குடும்பத்தோடு தொலைத்தனர் மக்கள். இதை இங்கு குறிப்பிடுவதற்குக் காரணம், அந்த நாட்டு மக்களிடம் கடவுளின் மீது நம்பிக்கை இல்லாததினால் அல்ல, அந்த மன்னர்களைத்தொலைத்தது. கடவுளின் பெயர்கூறி அக்கிரமம் புரிந்தார்கள் என்பதற்காகவே அவர்களைத் தொலைத்தார்கள்.

எனவே நாம் இங்கு, எண்ணற்ற ஆண்டவர்கள் ஏன் என்னும் போது, ஆண்டவன் இல்லை என்ற எண்ணத்தினால் அல்ல — ஒரே ஆண்டவனிருந்தால் போதும் என்ற கருத்தினால்தான்.

அடுத்து. இந்நாட்டு மக்களுக்கு நல்வாழ்வளிப்பதற்கு, சீரியதோர் அரசியல் இலட்சியமும்கொண்டது தி. மு. கழகம் என்பதையும் நீங்கள் அறிவீர்கள்.

இந்த நாட்டில் தரித்திரம் மிதமிஞ்சி இருப்பதற்கான காரணங்களையும் உங்களுக்குச் சொல்லியிருக்கிறார்கள்.

'இந்த நாட்டு மக்கள் உழைக்கவில்லையா?' என்றால் உலகத்திலேயே வேறெந்த நாட்டு மக்களையும்விட அதிகம் பாடுபடுகிறார்கள்.

பின் நாடு பாலைவனமா என்றால் அதுவுமில்லை. நம் நாட்டின் வளம், குன்றாதது—குறையாதது தங்கம் கோலாரில். இரும்பு சேலத்தில் நிலக்கரி நெய்வேலியில், அகிலும் சந்தனமும் மைசூரில் தேக்கும், தென்னையும், ஏலமும், மிளகும் திருவாங்கூரில் காவிரியும் பெண்ணையும் வயல் வெளியும் ஏராளம். கடலினுள் முத்துக்கள்—இப்படி வளமத்தனையும் கொண்ட நாடுதான்.

இத்தனை இருந்தும், இந்த நாட்டில் தரித்திரர்களாக மக்களிருப்பானேன்? என்றால் அதற்குக் காரணம், தென்னாடு, அடிமையாயிருக்கிறது வடவர்க்கு என்பதை ஆதாரங்களுடன் கழகம் எடுத்துக்காட்டிவந்திருக்கிறது. திராவிட நாடு திராவிடருக்கானாலன்றி, நம் தரித்திரம் தொலையாது—வறுமை அகலாது—வேலையில்லை என்ற வேதனை நீங்காது."

இவ்வாறு குறிப்பிட்டு பொதுச் செயலாளர் அவர்கள், திராவிட நாடு, எப்படி எல்லாம் வடவரால் அடக்கி ஆளப்படுகிறது? 2,000 கோடி ரூபாய்க்கு அதிகமான அளவில் தயாரித்து நிறைவேற்றப்பட்ட ஐந்தாண்டுத் திட்டத்தில் தென்னாட்டுக்குச் செலவு செய்தது எவ்வளவு? இதில் தென்னாடு எவ்வளவு ஏமாற்றப்பட்டிருக்கிறது என்பதையும் எடுத்துக் காட்டி, தென்னாட்டை அடிமைப்படுத்த, வெள்ளையர்களின் வாரிசாக வடநாட்டவர்கள் வளர்ந்துள்ளனர் என்றும் அவர்களின் பிடியினின்றும் நாம் விடுபட்டாலன்றி வாழ்வில்லை என்பதையும் விளக்கினார்கள்.

இந்த அரசியல் திட்டம் இந்த நாட்டு வாலிபர்களுக்குப் புரிந்துவிட்டது; அவர்கள் அறப்போர் உள்ளம் பெற்றுவிட்டனர். அப்படி அறப்போர் உள்ளம் பெறுவோரின் எண்ணிக்கை வளர இந்த ஊர் கழகம் பணி புரியவேண்டும் என்றும் பொதுச் செயலாளர் அண்ணாதுரை அவர்கள் குறிப்பிட்டார்கள்.

# 'ஆங்கிலத்தையே தேசிய மொழியாக ஏற்பவேண்டும்'

## 'மொழி சிக்கல் தீர அதுவே சிறந்த வழி'

சென்னை, பிப். 25—

'ஆங்கில மொழியை தேசிய மொழியாக ஏற்றுக்கொள்வதின் மூலமே, இந்தியாவில் இருந்துவரும் மொழி சிக்கலைத் தீர்க்க முடியும்.'

'மக்கள் அனைவருக்கும் பொது நிதி போன்று இருக்கும் ஆங்கில மொழியை புறக்கணிப்பது பொருளற்றதும், அறிவற்றதுமான செயலாகும்.'

இக்கருத்தை இந்திய ஊழியர் சங்க உறுப்பினரான பி. கொண்டாராவ் இராயப்பேட்டை கிளைக் கழகத்தில் பேசும்பொழுது குறிப்பிட்டார். கூட்டத்திற்கு முன்னாள் நீதிபதி எஸ். வரதாச்சாரியார் தலைமை வகித்தார்.

## மக்களே அமைத்துக்கொள்ளும் பள்ளிக்கூடங்கள்

அகமதாபாத், பிப். 24—

கட்சு மாநிலத்தில் உள்ள சமூக நலத் திட்ட பிரதேசத்தில் 15 - கிராமங்களைச் சேர்ந்த மக்கள் ஒன்று கூடி, கிராமம் ஒன்றுக்கு ஒரு பள்ளி வீதம் 15 பள்ளிகளை ரூ. 74,000 செலவில் தாங்களாகவே அமைத்து வருகின்றனர்

சர்க்கார் இதில் ரூ. 34,000 - தருமாம். எஞ்சிய 40,000 ரூபாயும் கிராம மக்களால், ரொக்கமாகவும், தன்னிச்சையாக மனமுவந்து பணி புரிவதின் மூலமும் தரப்படும் என்றும் தெரிகிறது.

இது அல்லாத வேறு சில கிராமங்களில் வாழும் மக்களும் இதே மாதிரி 15 பள்ளிகளை ஏற்கனவே கட்டி முடித்துள்ளனர். இந்த பள்ளிகளுக்கான மொத்தச் செலவு ரூ 2 லட்சம் என்று தெரியவருகிறது

## சர்க்கார் கணக்கில் ஒழுங்கீனம்!

### ரூ. 32 லட்சம் நஷ்டம்

மைசூர் சட்ட சபையில் சமர்ப்பிக்கப்பட்ட 1953-ம் ஆண்டைய தணிக்கைக் குறிப்பிலிருந்து, 1947 முதல் 1952 வரையில், மைசூர் சர்க்கார் இயந்திரக் கலப்பை சர்வீஸ் நிறுவனத்திற்கு மொத்தம் ரூ. 32,32,317 நஷ்டமேற்பட்டுள்ளதாகத் தெரிகிறது.

1951-52ல் மாத்திரம் ஏற்பட்ட நஷ்டம் ரூ. 8,47,783 ஆகும். பல இனங்களில் சரியான கணக்குகள் வைக்கப்படவில்லையென்றும், ஏற்பட்டுள்ள நஷ்டத்தை குறைந்த பட்ச அளவுக்குக் குறைக்கும் பொருட்டு இதற்கான காரணங்களை உடனடியாக விசாரிக்க வேண்டுமெனவும் தணிக்கைக் குறிப்பு கூறுகிறது.

## பத்திரிகையாளருக்கும் தொழில் தகராறு சட்டம்

புதுடில்லி, பிப். 24—

பத்திரிகையாளரிடையேயும் தொழில் தகராறு சட்டத்தைப் பிரயோகிக்க வேண்டுமென்ற மசோதாவை செய்தி; ஒலி பரப்பு இலாகா அமைச்சர் பி. வி. கேஸ்கர் ராஜ்ய சபையில் பிரரேபித்திருக்கிறார்.

இம்மசோதா, பத்திரிகைக் காரியாலயங்களிலுள்ள சிப்பந்திகளுக்குப் பிரயோகமாகாது. இது, பத்திரிகை ஆசிரியர், துணையாசிரியர்கள், நிருபர், பிழை திருத்துவோர் ஆகியோருக்கு மட்டுமே பொருந்துவதாகும்.

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம். ஏ., அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று (24, சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: சி. என் அண்ணாதுரை, எம்.ஏ.

